11th August 1960]

**SRI S. M. ANNAMALAI** : *ஸார், இப்படி சிறு நிலச் சுவாந்தார்கள், 4 எக்கர், 3 எக்கர் வைத்திருப்பவர்களை, எரித்தண்ணீர் பிடிப்பு என்று, கிணறுகளை மட்டும் விட்டு விட்டு, சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். 4, 3 எக்கர்கள் வைத்து இருப்பவர்கள், கிணற்றை மட்டும் வைத்துக்கொண்டு விவசாயம் செய்ய முடியாது. ஆகவே, அதை மறு பரிசீலனை செய்து, நிலங்களை அவர்களுக்கே ஜாரி பண்ணிக் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா ?*

**THE HON. SRI M. A. MANICKAVELU** : *இந்தச் சூழ் நிலை என் ஏற்பட்டது என்றால், ஜாகிர்தார் தன் இஷ்டம் போல் அலைன் பண்ணி விட்டார்; செட்டில்மெண்ட் செய்யும் போது, தவறாகச் செய்திருப்பது தெரிகிறது. டாங்க் பெட்டில் பயிர் செய்வதானால், எரி தூர்ந்து போய்விடும். இம்மாதிரிப் பயிர் செய்யக் கூடாது என்று தடுக்க வேண்டியிருக்கிறது. ஆனாலும், இம்மாதிரி நிலம் இழந்தவர்களுக்கு, சர்க்கார் நிலத்தைப் பங்கீடு செய்யும் போது, அவர்களுக்கு, ப்ரிபரென்ஸ், முதல் படியாகக் கொடுக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. அந்த முறையிலே, அவர்களுக்கு நிலம் கிடைக்கும்.*

**SRI A. GOVINDASAMY** : *பாதிக்கப்பட்டவர்களுக்கு நஷ்ட ஈடு கொடுக்கப்பட்டதா ?*

**THE HON. SRI M. A. MANICKAVELU** : *நஷ்ட ஈடு கொடுக்க முடியாது. இது துராக்ருதமாக, ஜாகிர்தாரோ, ஜமீந்தாரோ, செய்ததை நம்பி வாங்கி விட்டார்கள்; அப்படி வாங்கியிருக்கக் கூடாது. சட்டப் பிரகாரம் நஷ்ட ஈடு கொடுக்க முடியாது.*

*Tax exemptions to motor vehicles owned by local bodies*

* 112 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) whether tax exemptions are granted to motor vehicles owned by municipalities and panchayats;

(*b*) if so, from which year; and

(*c*) on what basis?

THE HON. SRI V. RAMAIAH : (*a*) & (*b*) Road-rollers and tractor graders belonging to local bodies are exempt from payment of tax from 1934 and 1941 respectively. Other motor vehicles owned by local bodies have to pay tax.

(*c*) It is considered that the machinery used for maintaining the roads should not be taxed.

**SRI V. K. KOTHANDARAMAN** : *ஸார், ஸ்தல ஸ்தாபனங்களிலே, நகர அபிவிருத்தி, சுகாதாரம் போன்ற பொதுக் காரியங்களுக்கு உபயோகிக்கும் எல்லா மோட்டார் வாகனங்களையும் வரி விதிப்பிலிருந்து விலக்களிக்க, இனிமேலாவது திட்டமிட உத்தேசமுண்டா ?*

[11th August 1960

THE HON. SRI V. RAMAIAH : இன்றைக்கு இருக்கும் நிலையை பதிலில் சொன்னேன். அம்மாதிரி மோட்டார் வாகனங்களுக்கு வரி உண்டா, இல்லையா என்பது பெரிய கொள்கை அடிப்படைப் பிரச்சினை. அது பரிசீலனை செய்யப்படவேண்டியது. அப்படிப் பரிசீலனை செய்யும்போது, அங்கத்தினர் கருத்துக்களை மனதில் வைத்துக் கொள்வோம்.

SRI N. MARUDACHALAM : விலக்கு அளிக்கும்படி எத்தனை முனிசிபாலிடிகள் கேட்டிருக்கின்றன ?

THE HON. SRI V. RAMAIAH : தனிக் கேள்வி போட வேண்டும்.

*Research on artificial rain*

*113 Q—SRI P. G. MANICKAM : கனம் ரெவின்யு அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) செயற்கை மழை ஆராய்ச்சி எந்தெந்த இடங்களிலே நடைபெற்று வருகிறது ?

(ஆ) 1960-ல் எந்தெந்த ஜில்லாக்களிலே செயற்கை மழை ஆராய்ச்சி செய்ய உத்தேசம் ?

(இ) செயற்கை மழை ஆராய்ச்சி எத்தனை தடவை நடத்தப் பட்டது ?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) The experiments on artificial rain making are now being conducted in Coimbatore.

(*b*) The experiments will be continued during 1960 in the Coimbatore district. The question of conducting experiments in the Tiruchirappalli district is under consideration. Proposals from the Chief Engineer (Irrigation) for conducting experiments in the Nilgiris and Salem districts are awaited.

(*c*) The total number of times the experiments were conducted is 267.

SRI P. G. MANICKAM : ஸார், மேற்கொண்டு பரிசோதனை செய்வது வெற்றிகரமாக இருக்குமா, திட்டம் உண்மையிலேயே பயன் அளிக்குமா ? சர்க்கார் அபிப்பிராயம் என்ன ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்த முறையிலே ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில்தான் மழை பெய்யச் செய்யமுடியும். ஆனால், அப்படிச் செய்வது, நமக்கு இருக்கும் அவசியம் பூராவுக்கும் உபயோகிக்கும் வகையில் பிரயோஜனப்படுமா என்று தெரியவில்லை. எக்ஸ்பெரிமெண்ட் மூலம் வரவழைக்கலாம் என்று நான் தெரிகிறது.